இப்பாட்டிலே அனுவைத்துளைத் தேழ்கடலைப் புகட்டிக், குறுகத்தறித்தகுறள். என முதற்சொல்லைமாற்றி - ஔவையாரால் புகழ்ச்சிசெய்யப்பட்டது.

(நாயனார்வரலாறு.)

நயமிகுபுகழ்ச்சேர் ஞாட்டுளோரந்தண - னுயர்மனைக்கிழத்தியங் குயிர்த்தவோர்மைந்தற் - கியாணர்சால்பகவ னெனப்பெயரீந்துபின் - கோணிலைநாணிலை குறித்தசாதகத்தாற் - புன்குலமாதுதோள் புணருமென்றோர்ந்தி௱ - தென்குலக்கிழுக்கதா மெனவுளங்கழீஇய - பீழையினேர்நீஇப் பின்பொருசிலநாண் - மாழைப்புன்கண்ணியை மதலையைத்தனைந்து - கோணைநீர்க்கங்கையிற் குடைகுவானேகினன் - பேணுமச்சிறுவனும் பிரமசரியமேற் - றேவாவருமறை யோதிநூலுணர்ச்சியின் - மூவாநலத்தினம் மூவாட்டையனு - மெந்தைநிற்பிரிதரற் கேதுவென்னெனத்தாய் - புந்திநைந்துரைசெயப் பொருள்வடபுலந்துரீஇப் - போதருநெறியிடைப் புலைமகள்கருவூ - ராதியென்பெயரின வரும்பெறற்செவ்வியள் - பொற்கொடிபோன்றெதிர் புகமருண்டினிய - சொற்கொடுபுகுநலந் தோய்ந்துணர்ந்ததன்பி - னிச்செயறகாதென வெண்ணிவிட்டேகுழி - மெய்ச்செயற்கற்பினள் விடாதுடன்றொடரக் - கண்டிருந்தொருசிலை கைக்கொடுநுதன்மிசைப் - பண்டரவெறிந்தவட் போக்குபுவிரைந்துபோய்த் - திகழ்பாகீரதி தீரமேலுளபதி - யகமெலாந்தேடியு மத்தனைக்கண்டிலா - தரந்தையிற்றனாதுநா டடைகுவான் மீண்டு - வரும்பொழுதிரவவன் மருவறச்சாலையிற் - றற்பிரிவாற்றுத் தளர்ச்சியோடேர்தொறு - மற்பகனேடுறு மாதிநற்காணூ - வுற்றடிவணங்கலு முப்பர்மறையோனவ - ணற்றியிற்சிலைவடு நேரினோக்கிமுன் - பிணங்குமாதெனத்தெளிந் திவண்வரவென்னென - வணங்குநிற்பிரிந்துறி லுவிவாழேனென - வின்றிடுமகவெலா மீன்றுழியேவிடுத் - தான்றியதுணிபொடு முடன்வரவல்லையேல் - வருகென்வண்ணலம் மடவரலியைதலா - லிருவருந்தலந்தொறு மியங்குகாலங்களி - லுப்பையெளவை யுறுவைவள்ளியென் - றிப்புவிபோற்றுமீ ரிருவர்மகளிரு-மன்னுசீரதிகமான் வள்ளுவர்கபில - ரென்னுமாடவ ரிம்மூவரும் பிறந் - தெவ்வெத்தலமெவ ரவர்க்குப்பிறப்பிட - மவ்வத்தலங்களி னவரவர்வளர்ந்தனர் - செப்புமவ்வெழுவருட் டிருவள்ளுவர்தா - மைப்புயலணிபொழின் மயிலாப்பூரில் - வள்ளுவர்மனையிடை வளர்ந்தனராங்கவ - ருள்ளுமுத்தேவரு ளொருவராகிய - சதுர்முகன்றிருவவ தாரமாதலின் - முதுமறையாகம மு

ந்தமிழ்க்கலைபிற - வையந்திரிபிலா தனைத்துநன்குணர்ந்து - தெய்வப்புலமையிற் சிறந்தரன்குருவா - யற்புதநிறணிந் தை ந்தெழுத்தியம்பித் - தற்பரலிங்கமெய் தரித்தருள்செயப்பெ றீஇ - வலங்கொள்பூவைசியர் மரபினுற்றெருண்குண - மிலங்கு றுவாசுகி யெனும்பெயர்த்தையலை - மணந்தகனமர்ந்து மகி ழ்ந்துறவறத்தரும் - வணங்குறவில்லறவாழ்வினுற்றருளா - லெ ன்னினுயர்வுறு மினித்தமிழ்மொழியென - மூன்றுறுபெருவ ட மொழியழுக்காறுற- மலைதரும்பற்பல மதத்தரும்வியந்து - தலைமிசைக்கொண்டிது தக்கதென்றேத்த - விம்மைமறுமை வீ டெய் தவிந்நூலொன் - றமமவமையுமென் றறிஞருள்ளுவ ப்ப- வெங்கட்கிணையிலை யெனத்தருக்குறுகடைச் - சங்கப்புல வரத் தருகருளத்தொழிய - வீரிருவேதமே யெழுவாயாகிய - சீரியவிழுமிய செவ்விய நூல்களிற் - சிறந்தபொருளெலாஞ்செ ந்தமிழ்க்குறளி - லறம்பொருள்காமமென் றுருமுப்பாலாற் - கூறினொருநூல்கொண்டுளந் - தேறினர்பயனெலாஞ் சேர்ந் துவாழ்குவமே. நாயனர்திருவடிவாழ்க.

(நாயனர்சொரூபஸ்துதி.)

திருமுடிமிசையார் மயிர்முடியழகுந் தீர்க்கபுண் டரநுத லழகும் - திரண்மணிபுயந்தை வருஞ்செவியழகுந் திகழ்நெடு ந் நாடியினழகும் - அருமுடிசெபமாலிகைசின்முத்திரைசேர பயநேர்வலக்கையினழகும் - அமிழ்துறழ்தமிழ்மா மறைமு றைவரத மமைதருமிடக்கையினழகும் - கருமுடியோகப்பட் டையினழகுங் கடிகொள்கீட் கோவணவழகும்-கழல்களிற்றிகி ரி வளைவரையழகுங் கமலநல்லாதனத்தழகும் - தருமுடிமுகி ரேய் மயிலையினிடைமாதவர்கள்கண்டிறைஞ்சவீற்றிருக்கும்- தமைபுகழ்த்திருவள்ளுவனெனுநாம சற்குருசரணமேசரணம்.

| | |
|---|---|
| ஆசிரியர்திருநாமங்கள் . . ௧௰ | நூலின்திருநாமங்கள் .... ௧௰ |
| திருவள்ளுவர். . .... .... * | திருக்குறள் ..... ........ .... * |
| நாயனர் ... .... ........ . .* | முப்பானூல் ... ......... * |
| தேவர் ........ ...... .........* | உத்தரவேதம் ..... ......... * |
| முதற்பாவலர் .... ......... * | தெய்வநூல் ..... ... .... . .* |
| தெய்வப்புலவர் ........ ... * | திருவள்ளுவர் ............ . .* |
| நான்முகனர் .... .......... * | பொய்யாமொழி ........ . * |
| மாதானுபங்கி .... ......... * | வாயுறைவாழ்த்து ...... ..... * |
| செந்நாப்போதார் ...... * | தமிழ்மறை .... ........ .. * |
| பெருநாவலர் ....... ..... . * | பொதுமறை ............. * |

# திருவள்ளுவர் குறளகராதி



